# ஸ்ரீராமாநுஜன் 133, 134

சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் சார்பாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் :—ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் | 1960ஆ ஜனவரி, பிப்ரவரிமீ | மலர். |
|---|---|---|
| 12 | விகாரிஆ மார்கழி, தைமீ | 1, 2 |


## திருவாய்மொழி நூற்றந்தாதி 24.

புகழொன்றுமால் எப்பொருள்களும்தானாய் *
நிகழ்கின்ற நேர்காட்டி நிற்க—மகிழ்மாறன்
எங்கு மீடிமைசெய இச்சித்து வாசிகமாய்*
அங்கடிமை செய்தான் மொய்ம்பால். (24)

| | | | |
|---|---|---|---|
| புகழ் ஒன்று மால் | கீர்த்தி பொருந்திய ஸர்வேச்வரன் | அடிமை செய இச்சித்து | தொண்டு செய்ய விரும்பி |
| எப்பொருள்களும் தான் ஆய் நிகழ்கின்ற நேர் காட்டி நிற்க | ஸகலபதார்த்தங்களும் தானேயாயிருக்கின்றபடியைக் காட்டி நின்றவளவில் | மொய்ம்பால் | மயர்வறமதி நலமருளப்பெற்ற சீர்மையினாலே |
| | | அங்கு | இருந்தவிடத்திலிருந்து கொண்டே |
| மகிழ் மாறன் | (அதனால்) மகிழ்ச்சி கொண்ட ஆழ்வார் | வாசிகம் ஆய் அடிமை செய்தான் | வாய் மொழியினாலாகிய கைங்கரியத்தைச் செய்தார். |
| எங்கும் | எவ்விடத்தும் | | |

(கருத்து) கீழ் * ஒழிவில் காலமெல்லா மென்கிற பதிகத்தில் கைங்கரிய மனோரதங் கொண்ட ஆழ்வாருடைய பாரிப்புக்குத் தகுதியாக எம்பெருமான் தானே எங்கும் எல்லாப் பொருள்களுமாய் நிற்கிற படியை ஆழ்வார்க்கு ஸேவை ஸாதிப்பிக்க; ஆழ்வாரும் எம்பெருமானுடைய ஸர்வாத்மபாவத்தைப் பேசும் முகத்தால் வாசிக கைங்கரியத்தைப் * புகழுநல்லொருவனென்கிற பதிகத்திலே செய்தருளினாரென்கை.

கீழ்த்திருவாய்மொழியில் "ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டுநாம்" என்று எம்பெருமானுக்கு ஸர்வ

கால ஸர்வாவஸ்தைகளிலும் ஸகலவிதமான கைங்கர்யங்களையும் செய்யப் பெறவேணுமென்று மநோரதங்கொண்ட ஆழ்வாருடைய பாரிப்பைக் கண்ட எம்பெருமான் ஆழ்வாருக்குத் தான் அவர் விருப்பத்தின்படியே செய்வதற்கு அநுகூலமாக எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்து எங்கும் நிற்கின்ற நிலையைக் காட்டிக் கொடுத்தான். அதுகண்ட ஆழ்வார், பெருங்காற்றில் வீழ்ந்த பழங்களைப் பொருக்கியெடுத்துக் கொள்ளக் கருதுமவர்கள் 'அந்தப் பழத்தை எடுப்போமா? இந்தப்பழத்தையெடுப்போமா? என்று அலமந்து கிடப்பதுபோல, அத்தைச் சொல்லுவேனோ இத்தைச்சொல்லுவேனோ? என்று அலமந்து, எங்கும் எல்லாவகைப் பொருளாயும் தோன்றுகின்ற அப்பெருமானுக்கு வாசிகமான கைங்கர் யத்தைச் செய்ய நினைத்து 'ஸகலகல்யாண குணங்களுக்கும் கடலான அவ்வெம்பெருமானுடைய தன்மையை யான் என்னவென்று சொல்லுவேன்?' என்று நிர்வேதத்துடனே அவனது ஸர்வாத்மத்வத்தைப் பேசுகிறார் இத்திருவாய்மொழியில்.

எம்பெருமானுக்குள்ள திருநாமங்களில் **அநந்தன்** என்பதும் ஒரு திருநாமம். 'அந்தமில்லாதவன்' என்பது அதன் பொருள். அந்தமாவது பரிச்சேதம். உலகில் ஒவ்வொரு வஸ்துவுக்கும் மூன்று வகையான பரிச்சேதங்கள் உண்டு; அவை—தேச பரிச்சேதம், கால பரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் எனப்படும். உலகில் காணப்படும் பொருள்கள் யாவும் இம் மூன்று வகைப்பட்ட பரிச்சேதங்களையுடையனவாகவேயிருக்கும். எந்தப் பொருளை யெடுத்துக் கொண்டாலும் 'இது இன்ன இடத்திலுள்ளது, மற்றோரிடத்தில் இல்லை' என்றும், 'இது இன்ன காலத்திலுள்ளது. மற்றொரு காலத்தில் இல்லை' என்றும், 'இது இன்ன வஸ்துவாகவுள்ளது, மற்றொரு வஸ்துவாக இல்லை' என்றும் சொல்லக்கூடியதாகவேயிருக்குமாதலால் (எம்பெருமான் தவிர) ஸகல பதார்த்தங்களும் த்ரிவித பரிச்சேத ஸஹிதங்களாகவேயிருக்கும்; எம்பெருமானொருவனே த்ரிவித பரிச்சேதரஹிதனாயிருப்பன். எங்குமுள்ளவனாய் எப்போதுமுள்ளவனாய் எல்லாப்பொருள்களும் தானாயுள்ளவனாய் இருக்கையாலே இதுபற்றியே **அனந்தன்** என்னப்படுகிறான். இவற்றுள் ஒன்றான வஸ்துபரிச்சேதராஹித்யம் நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு மிகவும் உள்ளீடாயிருப்பது. ஏனெனில்; சரீராத்மபாவத்தைக்கொண்டே இந்த வஸ்து பரிச்சேதராஹித்யத்தை நிர்வஹிக்கவேண்டும். சரீரங்களைச் சொல்லும் படியான சப்தங்கள் சரீரியளவும் செல்லக்கடவனவாதலால், எம்பெருமான் எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாதலால் எந்த வஸ்துவைச் சொல்லுகிற சப்தமும் எம்பெருமானளவுஞ்சென்று பர்யவஸிக்குமென்பது வேதாந்தஸித்தாந்தம். இதனை ஆழ்வார் முந்துற முன்னமே "உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்று சுருக்கமாகக் காட்டியருளினர். அதுதன்னையே இத்திருவாய்மொழியில் விஸ்தரித்து அருளிச்செய்கிறார் என்றுணர்க. .... .... .... *

## திருவாய்மொழி நூற்றந்தாதி—25.

**மொய்ம்பாரும் மாலுக்கு முன்னடிமை செய்துஉவப்பால் ***
**அன்பா லாடசெய்பவரை யாதரித்தும்—அன்பிலா**
**மூடரை நிந்தித்தும் மொழிந்தருளு மாறன்பால்***
**தேடரிய பத்திநெஞ்சே செய்.**

| | | | |
|---|---|---|---|
| மொய்ம்பு ஆரும் மாலுக்கு | மிகுந்த ஆற்றலையுடைய பகவானுக்கு | அன்பு இலா மூடரை நிந்தித்தும் | பக்தியற்ற மூர்க்கர்களைத் தூஷித்தும் |
| முன் அடிமை செய்த உவப்பால் | முன் பதிகத்தில் வாசிகமான கைங்கரியம் பண்ணப் பெற்ற மகிழ்ச்சியினாலே, | மொழிந்து அருளும் | அருளிச்செய்த |
| | | மாறன் பால் | ஆழ்வார் திறத்தில் |
| | | நெஞ்சே | மனமே! |
| அன்பால் ஆள் செய்பவரை ஆதரித்தும் | அன்புடனே அடிமை செய்பவர்களைக் கொண்டாடியும் | தேட அரிய பத்தி | வேறு எங்குங் காண முடியாத (மிகச் சிறந்ததான) பக்தியை |
| | | செய் | செய்யக்கடவை. |

*** புகழுநல்லொருவனென்கிற கீழ்ப்பதிகத்தில் எம்பெருமானுக்குத் தாம் வாசிகமான கைங்கரியம் செய்யப்பெற்றதனாலுண்டான களிப்பே * மொய்ம்மாம் பூம்பொழிற்பொய்கை யென்கிற பதிகமாக வடிவெடுத்தது என்னலாம். அந்தக் களிப்பினால் ஆழ்வார் செய்ததாவது, தம்மைப்போலவே எல்லாரும் பகவத்குணங்களிலீடுபடவேண்டியது ப்ராப்தமாயிருக்க, அப்படி யீடுபடாதவர்களை நிந்தித்தார்; ஈடுபடுமவர்களைக் கொண்டாடினார். இப்படிப்பட்ட ஆழ்வார் பக்கலிலே பக்தி பண்ணவேணுமென்று தமது திருவுள்ளத்தை நோக்கி அருளிச்செய்தாராயிற்று. செய்த—உவப்பால், செய்தவுவப்பால் என்று சந்தியாகாதது தொகுத்தல்.

ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானை மிகவும் அற்புதமாக அநுபவித்தார். அந்த அநுபவத்தினால் அபரிமிதமான ஆனந்தத்தையடைந்தார். திருவுள்ளத்திலுண்டான ஆனந்தம் வடிவிலே தொடை கொண்டது. அதனால் ஆடுவதும் பாடுவதுமாகத் தாம் ஆயினர். இந்நிலவுலகத்தில் இங்ஙனே பகவத்குணங்களில் ஈடுபட்டுக் களித்துப் பரவச சரீரர்களாக இருப்பவர்கள் எத்தனைபேருண்டு? என்று ஆராயத் தொடங்கினர்; அன்னவர் மிகச் சிறுபான்மையராய்: பகவத்குணங்களில் ஈடுபடாத பாவிகளே பெரும்பான்மையராய் இருப்பதைக்கண்டு திருவுள்ளம் மிக நொந்து, ஈடுபாடுடையாரைக் கொண்டாடியும் அஃது இல்லாதாரை நிந்தித்தும் செல்லுகிறார் இத்திருவாய்மொழியில்.

* **முந்நீர் ஞாலம்படைத்த** வென்கிற திருவாய்மொழியில் அளவுகடந்த துயரத்தையடைந்தார்; * புகழுநல்லொருவனில் அளவுகடந்த களிப்பையடைந்தார்! ஹர்ஷசோகங்கள் கூடாதென்று சாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்டிருக்கின்றதே; ஸ்ரீபாஷ்யத்தில் பக்திக்கு உறுப்பான **விவேகம்** முதலிய ஏழை நிரூபித்துவருமிடத்து * **அநவஸாத:, அநுத்தர்ஷ:***

என்று முடிவில் இரண்டு சொல்லப்பட்டன ; இவற்றுள் **அநவஸாதமாவது** —துயருற்றிராமை ; **அநுத்தர்ஷமாவது**—ஹர்ஷஹேதுக்களுண்டானாலும் அதிஹர்ஷங்கொள்ளாதொழிகை ; என்று விவரிக்கப்பட்டுள்ளதன்றோ ; ஆகவே ஹர்ஷசோகங்கள் கூடாதனவாயிருக்க, ஆழ்வார் அவற்றை ஏன் கொள்ளுகிறார் என்று சிலர் சங்கிக்கக்கூடும் ; ப்ராக்ருதவிஷயங்களைப் பெற்றதனாலுண்டாகும் களிப்பும், அவற்றை இழப்பதனாலுண்டாகும் கவர்வும் கூடாதென்பதே சாஸ்த்ர தாத்பர்யம் ! பகவத் குணாநுபவத்தினாலுண்டாகும் ஆனந்தமும் அடக்கமுடியாது ; அவ்வநுபவம் மற்றையோர்க்கு இல்லையேயென்றுண்டாகும் கிலேசமும் அடக்கமுடியாதென்க.

எம்பெருமானுடைய குணாநுபவம் விஞ்சினால், நின்றவிடத்தில் நிற்கமுடியாமல் ஆடுவதும்பாடுவதுமான நிலைமை பரவசமாக உண்டாகியே தீரும். முக்தர்களும் திருநாட்டில் களித்துப்பாடுவர்களென்றது. நாரத முனிவர் முதலானாரும் பகவத்ஸந்நிதியிலே வந்தவாறே ஆடுவது பாடுவதாக நிற்பர்களென்று சொல்லப்பட்டுள்ளது. இதுவன்றோ நம்முடைய கரசரணாதி அவயவங்களுக்குப் பயன். இப் பயன்பெறாத பாவிகளைப் பழிப்பதும் இது பெற்ற பெரியாரைப் புகழ்வதும் பகவதநுபவத்திலே ஒருவகையாதலால் அவை இத்திருவாய்மொழியிற் செல்லுகின்றன.

திருவாய்மொழி நூற்றந்தாதிக்கு வியாக்கியானமிட்டருளின பிள்ளை லோகஞ்சீயர் இப்பாட்டினுரையில் (அன்பிலா மூடரை நிந்தித்தும்) என்று ப்ரதீகமெடுத்து உரைசெய்து போமளவில் "……………* **மார்க்கம் ப்ரதர்சய** * என்னும்படியிறே அதிலுட்புகாதாரை அநாதரித்தபடி" என்றெழுதியுள்ளதாக அச்சுப் பிரதிகளிற் காண்கிறது. இங்கெடுத்துக் காட்டிய பிரமாணவசனம் * **மார்க்கம் ப்ரதர்சய** * என்றிவ்வளவேயுள்ளது; இவ்வசனம் எங்குற்றது? சக்ராங்கன ஸம்ஸ்கார காலத்தில் அநுஸந்திக்கப்படுவதொரு சுலோகம் "ஸுதர்சந ! மஹாஜ்வால ! கோடி ஸூர்ய ஸமப்ரப !, அஜ்ஞாநாந்தஸ்ய மே தேவ ! விஷ்ணோர் மார்க்கம் ப்ரதர்சய:" என்றுள்ளது. அதை இங்கு நிதர்சிக்க ப்ரஸக்தியொன்றும் காண்கின்றிலோம். இங்கு ஏதோ பிறழ்வு நேர்ந்திருக்கிறதென்று அறுதியிடலாகிறது. இதனை விவேகிகள் விமர்சித்துத் தெளிவுபெறுத்த வேணும்.(25)

## — அன்பர்களுக்கு அறிவிப்பு —

நம்முடைய ஸ்ரீராமானுஜன் பதினொரு பிராயங்களைக் கடந்து பன்னிரண்டாம் பிராயத்தில் இப்போது அடிவைக்கிறபடி. அடி தொடங்கி இதனை ஆதரித்துவரும் மஹான்கள் இனியும் ஆதரிக்கக் கடமைப்பட்டிருக்கின்றார்கள். அன்னவர்களை நாம் பிரார்த்திப்பது மிகையாகும். "வரில் பொகடேன், கெடில் தேடேன்" என்றொரு ஸ்ரீஸூக்தி நம் ஆசாரியர்கள் ஸாதிப்பதுண்டு. அந்த ரீதியிலே நிற்பவர்களைப்பற்றி நமக்கு விசார லேசமுமில்லை. "ஆள்கின்றானாழியான் ஆரால் குறையுடையம்" என்றிருக்கின்ற நாம் "ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத் கைங்கர்ய ரூபம்" என்று ஸங்கல்பித்துக்கொண்டே ஸ்ரீராமாநுஜனை நடத்திவருகிறோம். ஸ்ரீராமாநுஜனை மட்டுமன்று, ஸம்ஸ்க்ருத-ஆந்த்ர பத்ரிகைகளையும். — **பரமகாருணிக: பரமபுருஷ: ப்ரீயதாம்.** —

உ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீகாஞ்சீ பரதிவாதிபயங்கரம்**

**அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்**

# விகாரி௵ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

**ஸ்ரீஸ்வாமியின் அறுபத்தொன்பதாம் திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு**

**ஸ்ரீகாஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்**

நாளது மாசி௴ 25உ முதல் பங்குனி௴ 4உ திருவிசாகம் வரை

8—3—60 to 17—3—60 ★ 17—3—60 to 23—3—60

வேதபாராயணம் திவ்யப்ரபந்தஸேவை ரஹஸ்யாநுஸந்தாநம் ஸ்தோத்ர பாடம் வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும்.

ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி ப்ரார்த்திக்கப் படுகிறார்கள்.

வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே ஸாம வேதம், சுக்லயஜுஸ், யஜுர்வேதம் க்ரமாந்தம் திருவீதி வலத்துடன் நடைபெறும்.

திவ்யப்ரபந்த ஸேவையும் வேத பாராயணங்களும் 8—3—60 தேதியிலிருந்து [மாசிப்புனர்பூசம் முதலாக] நடைபெறும். திருவிசாகத்தன்று திவ்யப்ரபந்தசாத்து முறையாகும் பிறகு திருவோணத்தன்று வேதசாந்தியாகும். ஆகவே 8—3—60 முதல் 23—3—60 வரை வேத பாராயண கோஷ்டி.

இங்ஙனம்

ப்ரதிவாதிபயங்கரம் செல்வமணி என்கிற

ரங்கநாத தாஸன்.

Srimathe Ramanujaya Namah.



SRI KANCHI MAHA VIDWAN

JAGADACHARYA SIMHASANADHIPATHI

# P. B. Annangaracharya Swami's

## SIXTY-NINTH BIRTHDAY CELEBRATIONS

The Sixty-ninth Birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi, from 8—3—60 to 17—3—60 Vedas, Divya Prabandhams, Stotras and Rahasyas will be chanted. Procession of the Veda Goshti and religious lectures will also take place as usual. Vedaparayanam only will continue upto 23—3—60.

P. B. CHELLAMANI alias
RANGANATHACHARYA.

Rathnam Press (Branch) Madras-1

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.

# பஞ்சஸ்தவபாடபரிஷ்கரணம்.

(ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.)

"பட்டர் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம்" என்னும் நூலிலே, பட்டரருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் சதகத்வயத்திலும் நேர்ந்துள்ள பிறழ்வுகளை உபபத்திகள் காட்டிப் பரிஷ்கரித்தோம்; ஆழ்வானருளிச் செய்த பஞ்சஸ்தவத்தின் பாடபரிஷ்காரங்களை இனிச் செய்கிறோம்

[ஸ்ரீவத்ஸ சிஹ்நமிச்ரேப்ய:] இது ஆழ்வானுடைய தனியன். இதில் 'நம உக்தி மதீமஹே' என்கிற இரண்டாவது பாதத்தில் விமர்ச முண்டு. இந்தச்லோகம் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் உபக்ரமமாதலால் பட்டர் ஸ்ரீஸூக்தி பாடபரிஷ்காரத்திலே இது பற்றிக் கண்டு கொள்வது.

— ஸ்ரீவைகுண்டஸ்தவம் —

1. யோநித்யமச்யுத. இந்தச்லோகத்தில் "அச்யுதபதாம்புஜயுக்மருக்மவ்யாமோஹத:" என்றே எங்கும் பாடமுள்ளது. வ்யாமோஹத:.... வியாமோஹத்தினாலே யென்றபடி. ஆந்த்ரமண்டலத்தில் "வ்யாமோஹித:" என்று பண்டிதர்களுங்கூடப் பாட மோதிவருகிறார்கள். 'இது நமக்குப் பாடமன்று' என்னலாமேதவிர இதில் அவத்ய மொன்றும் சொல்லப் போகாது. எம்பெருமானார் எம்பெருமானுடைய பதாம்புஜயுகளமாகிய ஸௌவர்ணத்தினால் மயக்கப்பட்டார் என்று பொருளாகும்.

2. பக்திப்ரபாவபவதத்புத. இதில் மூன்றாவது பாதத்தில் "அச்யுத திவ்யதாம" என்று ஹ்ரஸ்வாந்தமான பாடமே பொருந்தும். எம்பெருமானுக்கு திவ்யஸ்தானமாயிருப்பவர் நம்மாழ்வார் என்பது பொருள். நித்யநபும்ஸக சப்தமாகையாலே 'திவ்யதாம' என்றே நிற்கும். இது ஆழ்வாருக்கு விசேஷணமாகையாலே பும்லிங்கமாகவேயிருக்க வேணுமென்றெண்ணிப் பலரும் "அச்யுததிவ்யதாமா" என்று நீட்டியோதுகின்றனர். அப்போது பஹுவ்ரீஹி ஸமாஸம் பண்ணினாலொழிய சப்தம் உபபந்நமாகாது. அதுபண்ணுமளவில் விவக்ஷிதார்த்தம் விபரீத

மாகும். ஆகவே 'திவ்யதாம' என்று ஹ்ரஸ்வாந்தமான பாடமே பொருந்தும்.

[8. ஜாநந்நபீஹ கில மாம்.] இதில் இரண்டாவது பாதத்தில் "விஷ்ணோঃ பதப்ரணயிநீம்" என்றவிடத்தில் ஏகதேசாந்வயம் கொள்ள வேண்டிவருகிறதேயென்று சங்கிக்கும் சிலர் பாடம் பிறழ்ந்திருக்கக் கூடுமோவென்று ஸந்தேஹிப்பதுண்டு. இங்கு இந்த சங்கையும் ஸந்தேஹமும் அஸ்தாநே. விஷ்ணோঃ என்கிற பதம் அடுத்த பதத்தின் ஏகதேசமான 'பத' என்பதில் அந்வயிப்பது ஏகதேசாந்வயமெனினும் இது சாஸ்த்ர நிஷித்தமன்று, சாஸ்த்ர ஸம்மதமே. விசேஷண பதத்திற்கு ஏகதேசாந்வயந்தான் தவறு. 'சுபகுணார்ணவஸ்ய விஷ்ணோঃ பதம்' என்ன வேண்டுமிடத்து 'சுபகுணார்ணவஸ்ய விஷ்ணுபதம்' என்றால் அது தவறாகும். இங்கு 'விஷ்ணோঃ' என்பது ஸ்வயம் விசேஷ்ய பதமாதலால் இதற்கு ஏகதேசாந்வயம் கொள்ளுமளவால் ஒரு அவத்யமுமில்லை. பேதஸம்பந்தேந அந்வயமென்றும், அபேத ஸம்பந்தேந அந்வயமென்றும் அந்வயம் இருவகைப்படும். அபேத ஸம்பந்தேந அந்வயிக்குமிடங்களில் தான் ஏகதேசாந்வயம் தவறு. இங்கு (விஷ்ணோঃ) என்பது விசேஷண பதமன்றாதலால் அபேத ஸம்பந்தேந அந்வயத்திற்கு ப்ரஸக்தியில்லை. பேத ஸம்பந்தேநைவ அந்வயமாதலால் ஏகதேசாந்வயம் அநவத்யம் என்று கொள்ளக்கடவது.

[16. யே து த்வதங்க்ரிஸரஸீருஹ.] இதில் மூன்றாம் பாதத்தில் 'அநாப்நுஷி' என்றே பலரும் ஓதுகின்றனர். ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதாவும் அப்படியே கொண்டார்; அநாபுஷி என்று ரூபம் தேறுமேயல்லது (அநாப்நுஷி) என்று தேறமாட்டாது. இது க்வஸு ப்ரத்யயாந்தமான சப்தமெனப்படும். அந்த ப்ரத்யயம் நியமேந லிட் ரூபத்தின்மேல்தான் ஏறும். தஸ்தௌ—தஸ்திவாந்; ஜகாம—ஜக்மிவாந்; உவாச—ஊசிவாந்; ததர்ச—தத்ருசிவாந். சகார—சக்ரிவாந். இங்ஙனே பலவும் காணலாம். ப்ரக்ருதத்தில், ஆப—ஆபிவாந். அதன்மேல் நஞ் ஏறி 'அநாபிவாந்' என்றாகும். அதற்கு ஸப்தம்யந்த ரூபம் அநாபுஷியே தவிர அநாப்நுஷியன்று. இந்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்திலேயே மேலே (63) * விச்வம் தியைவ விரசய்ய * இத்யாதி ச்லோகத்தில் ப்ரயுக்தமான "பராமம்ருசுஷঃ" என்கிற பதத்தின் விவரணத்தில் (பக்கம் 75ல்) அடியேனெழுதியிருப்பவையும் இங்கு நோக்கத்தக்கன.

[17. தத்வார்த்த தத்பர.] இதில் மூன்றாவது பாதத்தில் "தத்வபர ஸாத்விகஸத்புராணை:" என்றவிடத்து 'தத்வபல' என்கிற பாடமும் காண்கிறது. தத்வஜ்ஞாபனத்தைப் பலனாகவுடைய-என்று பொருள் கொள்ளலாம். தாத்பர்ய மொக்கும்.

[19. யঃ கல்வணோரணுதரঃ] இதில் பூர்வார்த்தத்தின் முடிவில் 'அபூத்' என்று பாடமுள்ளது. 'அபூ:' என்றிருந்தால் ஸ்வரஸம். இதைப்பற்றி அடியேனுடைய வியாக்கியானத்தில் விளக்கம் காண்க.

[28. ரூபச்ரியா பரமயா.] இதில் மூன்ருவது பாதத்தில் "சிஹ்நை: அநிஹ்நவ பரை:" என்கிற பாடமே பெரும்பான்மையாக வழங்கிவருகின்றது. 'அலபிக்க முடியாதவையான சிஹ்னங்களினல்' என்கிற அர்த்தம் ஸ்வரஸமாக விவக்ஷிதமாயிருக்கும். அப்போது 'அநிஹ்நவ பதை:' என்கிற க்வாசித்கமான பாடம் ஸங்கதமாகும். 'அநிஹ்நவ பதை:' என்றது-நிஹ்நவ அநாஸ்பதை: என்றபடி.

[29. யஸ்யா:கடாக்ஷணமநுக்ஷணம்.] இதில் பூர்வார்த்தத்தின் முடிவில் 'ஸார்வஜநீநம்' என்று வழங்கிவரும் பாடம் தவறு; அப்படிரூபம் நிஷ்பத்தியாக வழியில்லை, ஸர்வஜநீநமென்பதே சுத்தபாடம். பட்டா ஸ்ரீஸூக்திபரிஷ்காரத்தில் (பக்கம் 9-ல்) 18. ஸர்வபதீநமீக்ஷணம். என மகுடமிட்டெழுதியுள்ளதும் இங்கு நோக்கத்தக்கது.

[34. யே த்வத்கடாக்ஷ ல்வலக்ஷ்யம்.] இதில் மூன்ருவது பாதத்தில் "யத்கேபி ஸஞ்ஜகரிரே" என்றவிடத்தில் 'ஸஞ்ஜகதிரே' என்று பாடம் வழங்கி வருகின்றது. (ஸஞ்ஜகது:) என்று ரூபம் தேறுமேயொழிய (ஸஞ்ஜகதிரே) என்று தேருது. 'ஸஞ்ஜகரிரே' என்பதுதான் சுத்த பாடம். குவலயாநந்தத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ளதான "அங்கம் கேபி சசங்கிரே" இத்யாதி ச்லோகத்தில் "ஸாரங்கம் கதிசிச்ச ஸஞ்ஜகதிரே" என்று பாடம் வந்திருக்கிறது. அங்கும் 'ஸஞ்ஜகரிரே' என்பதுதான் ப்ராசீநபாடமென்று ப்ராஜ்ஞர்கள் சொல்லக்கேட்டிருக்கிரோம். அடுத்த (35) ச்லோகத்தில் [* நித்யேஷூ வஸ்துஷூ] இத்யாதியில் மூன்ருவது பாதத்தில் "ஐச்வர்யமத்ர தவ ஸாவதி ஸங்கிரந்தே" என்கிற ப்ரயோக முள்ளது. அது லட்ரூபம். 'ஸஞ்ஜகரிரே' என்பது அதன் லிட்ரூபம்.

[35. நித்யேஷூ வஸ்துஷூ பவந்நிரபேக்ஷமேவ.] இதில் மூன்ருவது பாதத்தில் "ஸாவதிகம் கிரந்தே" என்று வழங்கும்பாடம் தவறு; 'ஸாவதி ஸங்கிரந்தே' என்கிற பாடமே பொருத்தமானது.

[64. ய: கச்சிதேவ யதி] இதில் முடிவில் 'உரீகரோஷி' என்று மத்யமபுருஷக்ரியையிருக்கையாலே இரண்டாம் பாதத்தில் 'பகவந்தம்' என்றிருக்கிற ப்ரதம புருஷநிர்தேசம் சேராதென்று கொண்டு சிலர் 'பவ்யோ பஜேத ஹி பவந்தம்' என்று பாடத்தைத் திருத்துவர். அது வேண்டா; பகவந்தம் என்றது தேவரீரையென்றபடி. பூஜ்யம் பவந்தம் இதியாவத்.

[68. அம்போருஹாக்ஷம்.] இதில் இரண்டாம் பாதத்தின் முடிவிலும் மூன்றும் பாதத்தின் முடிவிலும் காந்திம் என்று வழங்கி வரும் பாடம் தவறு; வபுஸ்ஸூக்கு விசேஷணங்களாகையாலே இரண்டிடத்திலும் காந்தி என்று அநுஸ்வாரரஹிதமாகவேயிருக்கத்தக்கது.

[70. வஜ்ராங்குச த்வஜஸரோருஹ.] இதில் மூன்ருவது பாதத்தின் முடிவில் வழங்கி வருவதான 'விகலத் ப்ரபாபி:' என்னும் பாடத்தில்

அநுபபத்தியில்லை; 'விகலத் ப்ரபாத்பி:' என்று காண்கிற பாடம் ஸாபோபநம். அபிஷேகத்திற்கு அப்பு வேணுமன்ரோ.

[71. த்ரைவிக்ரம க்ரமக்ருதா க்ரமணத்ரிலோக முத்தம்ஸ முத்தம மநுத்தம பக்திபாஜாம். நித்யம் தநம் மம கதா ஹி மதுத்தமாங்கம் அங்கீகரிஷ்யதி சிரம் தவ பாத பத்மம்.] தேவரீருடைய உலகமளந்த பொன்னடிகளை அடியேனுடைய சென்னியானது நித்யசேகரமாகக்கொள்வது என்றைக் கோவென்கிறார் இந்த ச்லோகத்தினால். இங்கு அடியேனுடைய வியாக்கியானத்திலெழுதியிருப்பதை மீண்டெடுத்துக் காட்டுகிறேன். "இந்த ச்லோகத்தில் பாதபத்மத்தை கர்த்தாவாக வைத்து உத்தமாங்கத்தை கர்மமாக்கி, தேவரீருடைய பாதாரவிந்தமானது என்னுடைய சென்னியை எப்போது அங்கீகரிக்கப் போகிறதென்று சிலர் பொருளுரைக்கப் பார்ப்பர்கள்: அது பொருந்தாது. அப்போது இரண்டாவதுபாதத்தில் உத்தம்ஸம் என்றது சேராது. ஏனெனில், அந்த சப்தம் நித்யபும்லிங்கமாகையாலே 'உத்தம்ஸ: பாத பத்மம்' என்றேயிருக்கக் கடவதாகும். பாதபத்மமென்பதை த்விதீயாந்தமாகத் திருவுள்ளம்பற்றி ப்ரயோகித்தருளினபடியாலே உத்தம்ஸமென்றதும் த்விதீயாந்தமாகக் குறையில்லை.

[76. த்வாம் ஸேவிதும்.] இதில் மூன்றாவது பாதத்தில் "தேவ்யாச்ரியாஸஹ வஸந்தம், லஸந்தம்" என்பன பாடபேதங்கள். லஸந்தமென்கிற பாடம் அழகியது.

[77. கைங்கர்ய நித்யநிரதை:] இதில் நான்காம் பாதத்தில் 'மத் தேவதை:' என்பது பெரும்பாலும் வழங்கி வருகிறபாடம். இது சிறிதும் பொருந்தாது. விவக்ஷிதார்த்த விபரீதமுமாகும். 'மத்தைவதை:' என்பதே யுக்தமான புராதனபாடம்:

[93. பூயாம்ஸி பூய உபயந்.] இதில் மூன்றாவது பாதத்தில் "துஷ்க்க விமிச்ர கல்பம்" என்கிறபாடம் தவறு. "து:க்க விமிச்ரம் அல்பம்" என்பதேபாடம்.

[95. லப்யேஷு துர்லபதரேஷ்வபி] இதில் இரண்டாவது பாதத்தில் "ஸஹஸ்ரகுணத: ப்ரதிலம்பநேபி" என்கிற பாடம் தவறு; "ஸஹஸ்ரகுண தத்ப்ரதிலம்பநேபி" என்பதே யுக்தபாடம்.

ஸ்ரீவைகுண்ட ஸ்தவ ஸமாப்தியில் ஒரு தனியன் அநுஸந்திக்க வேண்டிய துண்டு; அதைப் பலர் அறியார்; அதனை அவசியம் அநுஸந்திக்க வேண்டுமென்பதற்காக இங்கு விஜ்ஞாபயே.

*** வ்யக்தீகுர்வந் நிகமசிரஸாமர்த்தமந்தர் நிகூடம்**
**ஸ்ரீவைகுண்டஸ்துதிமக்ருத ய: ச்ரேயஸே ஸஜ்ஜநாநாம்.**
**கூராதீசம் குருதரதயாதுக்தஸிந்தும் தமீடே**
**ஸ்ரீவத்ஸாங்கம் ச்ருதிமத குருச் சாத்ரசீலைகதாம.**

## — அதிமாநுஷஸ்தவம் —

[3. ஸ்ரீமத் பராங்குச முநீந்த்ர.] இதில் பூர்வார்த்தத்தின் முடிவில் "அஞ்ஜஸாப்ய" என்றுள்ளது. 'அஞ்ஜஸா ஆப்ய' என்று பதம் பிரியும். இங்கே சிலர் சங்கிப்பதுண்டு; (ஆப்த்வா) என்று ரூபம் தேறுமே யொழிய (ஆப்ய) என்று தேறுவதற்கு வழியில்லையே; ப்ர, ஸம், அவ இத்யாதி உபஸர்க்க யோகமிருந்தாலன்றோ (ப்ராப்ய, ஸமாப்ய, அவாப்ய) என்று வரும். உபஸர்க்க யோகமில்லாத இவ்விடத்தில் (ஆப்ய) என்கிற ல்யபந்தம் ஸங்கதமாகாதே - என்று. கேண்மின். உபஸர்க்க யோகமில்லை யாகில் ல்யப்பு வராதென்பது திண்ணமே. இங்கு உபஸர்க்க யோகமுள்ளதே. ஆங் என்கிற உபஸர்க்கம் ஸவர்ண ஸந்திபெற்று நமக்குத் தெரியாமலிருக்கிறது. இதற்குமேல் சிலர் சொல்லுவதுண்டு; (அதாவது) அநாவச்யகமாக அப்படியேன் ஏறிட வேண்டும்? (ஆப்த்வா) என்றே பாடம் கொண்டால் இங்கு வ்ருத்தபங்கமில்லையே; (அஞ்ஜஸா ப்த்வா) என்றிருந்த பாடம் பிறழ்ந்துவிட்ட தென்னலாமே என்கிறார்கள். இங்கு இங்ஙனே திருத்திவிடலாமானாலும் இவ்வாசிரியர் தாமே ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "முக்திமாப்ய பரமாம் பரே பதே" என்றருளிச் செய்திருக்கிறாரே; அங்குத் திருத்த முடியாதே. ஆக (ஆப்ய) என்னும் ரூபத்தில் அநுபபத்தியில்லையென்று கொள்ளக்கடவது.

[8. சப்தாதி ஹேயமிஹ.] இங்கு "சப்தாதி ஹேய இஹ" என்கிற பாடம் பெரும்பான்மையாக வழங்கி வருகிறது. மேலே 'கோசர:' என்று பும்லிங்கமாக இருக்கையாலே அதற்குச் சேர (ஹேய:) என்று பும்லிங்கமாக விருக்கவேணும் என்று கருதிச் சிலர் (ஹேய:) என்று திருத்தியிருக்கக்கூடும். கோசரசப்தம் நித்யபும்லிங்கமாகையாலே இது அங்ஙனே தானிருக்கக்கடவது. ஸாமாந்யே நபும்ஸக மென்பது சாஸ்த்ரீயமாகையாலே 'சப்தாதி ஹேயம்' என்று க்லீபமாகவே யிருக்கத்தக்கது. கோசர: என்னும் பதம் இதற்கு பாதகமாகாது. மேலே (29) "ஹாஹந்த ஹந்த பவத:" என்னும் ச்லோகத்தில் "சரணாரவிந்தத்வந்த்வம் மம அக்ஷ்ணோர் விஷய:" என்றது இங்கே நினைக்கத்தக்கது.

[18. அக்ஷுண்ணயோகபதம்.] இதில் நான்காவது பாதத்தில் "தேவீமவாப்து மநல:" என்கிற பாடம் தவறு. அநலம் என்பதே ஸாது; அதற்கு அஸமர்த்த: என்று பொருளாதலால் (அநல:) என்றுகாணிருக்கவேணு மென்றெண்ணித் திருத்திவிட்டார்கள். அலம் என்கிற அவ்யயத்தின்மேல் நஞ் ஏறி அநலம் என்றாகியுள்ளது. பட்டரும் அஷ்டச்லோகியில் முடிவுச்லோகத்தில் "கர்த்தும் த்யக்துமபி ப்ரபத்து மநலம் ஸீதாமி து:க்காகுல:" என்று ப்ரயோகித்தருளினர். ஆக அநல: என்பது அஸாது. அக்னி யென்னும் பொருளில் அநல: உண்டு. மேலே 36-ஆம் ச்லோகத்தில் "நாலம் பபூவித" என்றதும் குறிக்கொள்ளத்தக்கது.

[20. தாஸஸ் ஸகா ஸமபவத்.] இதில் முடிவில் 'ஸாலகிரீந் அவித்ய:' என்பதே ஸாதுவான பாடம். வித்யதியின்மேல் லங்மத்யமபுருஷரூபம்

இது. பலர் (அவத்யஃ) என்று சொல்லுவது தவறான பாடம். **அவதீஃ** என்று ரூபமுண்டே யொழிய (அவத்யஃ) என்கிற ரூபம் அஸம்பவி. ஹ்ந தாதுவின்மேல் (அவதீஃ) என்றுதானாகும். (அவித்யஃ) என்பது ஹ்நதாது வின் ரூபமன்று.

[33. **யத் த்வம் க்ருதாகஸமபி.**] இந்த ச்லோகத்தின் முடிவில் 'அவதாரயாமி' என்ற சிலருடைய பாடம் அஸ்வரஸம். 'உபதாரயாமி' என்பதே யுக்தமான பாடம். அவதாரயாமி என்பதற்கு நிச்சயிக்கிறே னென்று பொருள். இங்கு அப்பொருள் விவக்ஷிதமன்று. [**உபதாரயாமி**] ஒருவாறு தேறுகிறேனென்கை.

[42. **காந்தாலகாந்தமமலம்.**] இந்த ச்லோகத்தின் முடிவில் "நவநீதமுதாப்யமோஷீ:" என்பதே ஸாது பாடம். "உதாமுமோஷீஃ" என்கிற பாடம் பொருந்தாது. திருடினாய் என்னும் பொருளில் (அமுமோஷீஃ) என்கிற ரூபம் தேறாது.

[59. **அத்யாபி நாஸ்த்யுபரதிஸ் த்ரிவிதாபசாராத்.**] இப்பாடத்தில் அநுபபத்தி யொன்றுமில்லை. தத்வதீபத்தில் வாதிகேஸரி ஜீயர் ஆதரித்த பாடம் "அத்யாபி நஹ்யுபரதஃ" என்பது. 'நாஸ்ம்யுபரத:' என்கிற பாடமும் காண்கிறது. ரீதிபேத மின்றிக்கே நன்கு பொருந்துமிப் பாடங்கள்.

[61. **பாபீயஸோபி சரணாகத சப்தபாஜ:**] 'சரணாகதிசப்த' என்னும் பாடத்தில் அநுபபத்தியில்லையாயினும் அவ்வளவு ஸ்வரஸமன்று.

## — ஸுந்தரபாஹுஸ்தவம் —

[8. **ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞா.**] இதில் இரண்டாவது பாதத்தில் (லம்பநகாதர) என்றும் (லங்கநகாதர) என்றும் இருவகையானபாடம்காண் கிறது. இரண்டும் கொள்ளத்தக்கதே. (லம்பந) என்னும் பாடத்தில் 'லம்பநேந காதரா' என்று த்ருதீயாஸமாஸம் கொள்ளக் கடவதாகும்; (லங்கநகாதர) என்னும் பாடத்தில் 'லங்கநாத் காதரா' என்று பஞ்சமீஸ மாஸம் கொள்ளக்கடவதாகும். ஆனாலும்; இந்த ச்லோகம் "கருவாரணம் தன்பிடி துறந்தோடக் கடல்வண்ணன் திருவாணை கூறத் திரியுந் தண் மாலிருஞ் சோலையே" என்கிற பெரியாழ்வார் பாசுரத்திற்கு மொழி பெயர்ப்பாகத் திருவவதரித்ததனால் (லம்பந காதர) என்னும் பாடமே மிக ஏற்கும். மேல் பத்தாவது ச்லோகத்தில் "**ஸ்வமதமலங்கயிதும்**" என் றிருப்பதனால் (லங்கந காதர) என்னும் பாடம் அதற்கு இணங்குமோ வென்று ஒரு ஸமயம் நாம் நினைத்ததுண்டு; அதனை இங்கு ஸ்மரிக்க ப்ரஸக்தியில்லை.

[11. **ஹரிகுலமகிலம்.**] இதில் மூன்றாவது பாதத்தில் 'நிஜகுலப ஜடாயுஷ:' என்ற விடத்தில் சிலர் சங்கிப்பதுண்டு; ஜடாயு சப்தம்

உகாராந்தமாகையாலே 'ஜடாயோ:' என்றிருக்கவேண்டுமே யென்று. இவ்வாசிரியர் தாமே கீழ் அதிமாநுஷஸ்தவத்தில் (ச்லோ. 18ல்) * அக்ஷுண்ணயோகபத மக்ர்யஹுதம் ஜடாயும் * என்று உகாராந்த மாகவும் ப்ரயோகித்து இங்கு இங்ஙனே பிரயோகித்தருளி யிருக்கையாலே இச்சொல் உகாராந்தமாயும் ஷகாராந்தமாயுமுண்டென்பது ஆசிரியர் திருவுள்ளமென்று கொள்ளக்கடவது. ஸ்ரீராமாயணத்தில் ஷகாராந்தமே.

[15. ஜநிஜீவநாப்யய] இதன் முடிவில் "வந சைல ஸம்பவமஹம் பஜே மஹ:" என்பதை அவ்யுத்பந்நர் சிலர் "அஹம்பஜேமஹி" என்று பாடம் செய்ய, அப்படியொரு பாடம் பரவியிருப்பது வருந்தத்தக்கது.

[26. யேஷ்வேகஸ்ய குணஸ்ய] இதில் நான்காவது பாதத்தின் தொடக்கத்தில் इद्धम् என்கிறபதம் அபூர்வமான ப்ரயோகம். 'இந்தீ— தீப்தௌ' என்கிற தாதுவடியாகப் பிறந்த க்தப்ரத்யயாந்தமான சொல் வடிவமிது. இந்த மருமமுணராத பலர் (இத்தம்) इत्थम् என்றே பாடங்கொண்டனர். எல்லாப் பதிப்புகளிலும் இந்தத் தவறான பாடமே யுள்ளது. இச்சொல் இங்கு ஸர்வாத்மநா அப்ரஸக்தம்.

[40. அந்தம் தமஸ் திமிரநிர்மிதம்.] இதில் மூன்றாவது பாதத்தில் "ஈசஸ்ய கேஸரி கிரே:" "கேசவகிரே:" "கேசவஹுரே:" என்று மூவகையான பாடங்கள் காண்கின்றன. திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (9—9—7) * தேசமெல்லாம் வணங்குந் திருமாலிருஞ் சோலைநின்ற கேசவநம்பி * என்றருளிச் செய்திருக்கையாலே 'கேசவ ஹுரே:' 'கேசவகிரே:' என்ற பாடங்கள் அதற்குச் சேரும்.

[61. அதோமுகந்யஸ்தபதாரவிந்தயோ:] இதில் இரண்டாம் பாதத்தில் "உதஞ்சிதோதாத்த ஸுநாலஸந்நிபே" என்றிருந்தபாடம் "ம்ருணால ஸந்நிபே" என்று பிறழ்ந்துவிட்டது. இது ஜங்கைக்கு விசேஷணமாகையால் கமல நாளத்தோடு ஒப்புச்சொல்லுகையே ப்ராப்தம். ம்ருணாளம் இங்கு அப்ரஸக்தம். அப்பாடம் தவிர்க்கத்தக்கது.

[61. ஸுஸுந்தரஸ்யாஸ்ய பதாரவிந்தே.] இதில் இரண்டாவது பாதத்தில் "பாதாரவிந்தாதிக" என்கிற பாடம் தவறு. "பதாரவிந் தாதிக" என்பதே வ்ருத்தத்திற்குச் சேர்ந்தபாடம். "பதாரவிந்தே பதாரவிந்தாதிக ஸௌகுமார்யே" என்றால் பொருந்தவில்லையேயென்று ப்ரமித்த சிலர் 'பாதாரவிந்தாதிக' என்று மாற்றிவிட்டார்கள். முதலிலுள்ள பதாரவிந்த சப்தம் தாமரைபோன்ற திருவடிகளென்று பொருள் கொண்டது. இரண்டாவதான பதாரவிந்த சப்தம் — திருவடிகளுக்கு ஆஸனமாயிருக்கின்ற தாமரையைச் சொல்லுகிறது.

[69. யஸ்யா: கடாக்ஷணம்.] இந்த ச்லோகத்தின் பூர்வார்த்தம் சிறிதும் மாறுபடாமல் கீழ் ஸ்ரீவைகுண்டஸ்தவத்திலும் (29) வந்துளது; அங்குநேர்ந்த அசுத்தபாடம் இங்கும் நேர்ந்திருக்கின்றது. ஸார்வஜ்ஞீந மென்பதை ஸர்வஜ்ஞீநமென்று இங்கும் திருத்திக்கொள்வது.

[83. ஜ்ஞாநிநஸ் ஸததயோகிந:] இதில் இரண்டாவது பாதத்தில் "ஸுந்தராங்க்ரி பரபக்திபாகிந:" என்கிற பாடம் தவிர "பதபக்திபாகிந:" என்னும் பாடமுமுண்டு. (அங்க்ரி] யென்றாலும் திருவடியாய், (பத) என்றாலும் திருவடியாய் புநருக்தியாகிறதேயென்று சங்கிக்கவேண்டா; **பதம்** என்பதற்கு ஆஸ்பதமென்று பொருள். அழகருடைய திருவடியை ஆஸ்பதமாகக் கொண்ட பக்தியையுடையவர்கள் என்றவாறு. பஹுவ்ரீஹி ஸமாஸம் கொள்ளக்கடவதாம்.

இதில் மூன்றாவது பாதத்திலுள்ள (ஆப்ய) என்னும் ல்யபந்தாவ்யயத்தைப்பற்றிச் சொல்ல வேண்டுவது கீழ் அதிமாநுஷஸ்தவத்தில் மூன்றாம் ச்லோகத்தைப்பற்றி யெழுதியுள்ளவற்றில் காண்க. (பக்கம் 9)

[93. ஸ்வப்ருஷ்டே ப்ரஷ்டாத்ரி.] இந்த முதல் பாதத்தில் "ப்ரஷ்டாத்ரி" என்ற சொல் வடிவத்தின் மருமமுணராதவர்கள் "ஸ்வப்ருஷ்டே ப்ருஷ்டாத்ரி" என்று இரண்டு ப்ருஷ்டங்களைச் சொல்லுவர்கள். இரண்டாவது ப்ருஷ்டமன்று; **ப்ரஷ்டம்**; * प्रष्ठोऽग्रगामिनि—ப்ரஷ்டோக்ரகாமிநி * என்பது வியாகரண ஸூத்ரம். ச்ரேஷ்டமென்று பொருள் தேறும். சிறந்த மலை யென்றபடியாய் மந்தரமலையைச் சொல்லிற்றாகும்.

[98. க்ஷித்ரியம் ஜநிஸம்ஹ்ருதி]. இதில் இரண்டாவது பாதத்தில் "நிகிரணோத்கிரண" என்ற விடத்தில் பெரிய பிழைகள் இரண்டுள்ளன. அடியேனுடைய சில பதிப்புகளிலும் இப்பிழைகள் புகுந்து விட்டன. நெடுநாள் அநவஹிதனாயிருந்தொழிந்ததற்கு மிகவும் அநுதபித்தேன். நிகிரணம், உத்கிரணம் என்று சொல் வடிவம் கிடையாது. நிகரணம், உத்கரணம் என்பதே சொல் வடிவம். நிகிரதி, உத்கிரதி, நிகிரந், உத்கிரந்—என்கிற சொல் வடிவங்களைக் கண்டு நிகிரணம் உத்கிரணம் என்கிற மருள் உண்டாய் விடுகிறது. இந்த மருள் ப்ரயத்ந பூர்வகமாகத் தொலைக்கத் தக்கது. 'நிகரணோத்கரண' என்பதே சுத்தபாடம்.

[125. ஆயோத்யிகாந்.] இதில் 'ஆயோத்யகாந்' என்கிற பாடம் உபேக்ஷணீயம்; 'ஆயோத்யிகாந்' என்கிற பாடமே ஆதரணீயம். இங்கு அடியேனுடைய வியாக்கியானம் கடாக்ஷிக்கத்தக்கது.

[129. விஜ்ஞாபநாம் வநகிரீச்வர.] இதில் மூன்றாம் பாதத்தில் "ஸ்ரீரங்கதாமநி........ஏஷ ஸோஹம்" என்பது பாடமன்று; **ஏகதோஹம்** என்பதே பாடம். கோயிலிலே ஒருபுறத்திலே அடியேன் வாழ்வேனாக வேணும் என்பது இங்கு விவக்ஷிதம். இதை யடியொற்றியே வேதாந்த வாசிரியர் அபீதிஸ்தவத்திலே "க்வசந ரங்கமுக்யே விபோ!...... மாம் வர்த்தய" என்று பணித்தது. ஏகத: என்பதும் க்வசந என்பதும் பர்யாயம்.

[132. இதம் பூயோபூய:] இதில் இரண்டாவது பாதத்தில் "**விஜ்ஞாப்ஸ்யாமி**" என்கிற பாடம் மிகத்தவறு. வடமொழியில் அப்படியொரு சொல்வடிவமே கிடையாது. **விஜ்ஞீப்ஸாமி** என்பதே சுத்தபாடம். விஜ்ஞாபயாமி என்பதே இதன்பொருள். "விஜ்ஞாபயிதுமிச்சாமி" என்று ஸம்ஸ்க்ருத வ்யாக்யாதா எழுதியிருப்பது "விஜ்ஞாப்ஸ்யாமி" என்கிற அபபாடத்தில் ப்ரத்யயத்தாலே போலும். .... .... *

[13. ப்ரசாந்தாநந்தாத்ம.] இதில் நான்காவது பர்தத்தில் "பிஸ்ப்ர க்ஷந்தி" என்பதை 'விஸ்ப்ருக்ஷந்தீ' என்றும் 'பிஸ்ப்ருக்ஷந்தீ' என்றும் சொல்லுவர் பலர்; பிஸ்ப்ரக்ஷந்தீ என்பதே சுத்தமான சொல்வடிவம். ஸ்ப்ரஷ்டும் இச்சந்தீ—பிஸ்ப்ரக்ஷந்தீ.

[14. நவக்தும் நச்ரோதும்.] இதில் இரண்டாவது பாதத்தில் "ந ச த்ரஷ்டும் ப்ரேம்ணு" என்று பாடம் பரவிவிட்டது. ஸ்ப்ரஷ்டும் என்பது (ப்ரேம்ணு) என்று எப்படி மாறுபட்டதோ அறியோம். ப்ராக்ருதபாஷை யில் 'நீலோத்பலம்' என்பதற்கு (கந்தொட்டம்) என்பது ஆதேசமாக விதிக்கப்படுகிறது. அப்படி ஸம்ஸ்க்ருதத்தில் ஸ்ப்ரஷ்டும் என்பதற்கு (ப்ரேம்ணு) என்பது ஆதேசமோ என்று சங்கிக்கலாகிறது.

[16. குணைஷ் ஷட்பிஸ் த்வேதைஃ] இதில் பூர்வார்த்த முடிவில் 'த்ரிபிரபுஃ' என்றிருந்த பாடம் நெடுநாளைக்கு முன்னமே "த்ரிபிரபூத்" என்று விகாரப்பட்டுவிட்டது. ஸம்ஸ்க்ருதவ்யாக்க்யாதா அப்பாடத் தையே ஆதரித்து அநுவதிக்கவும் தகாதபடி யெழுதி வைத்துள்ளார். பெரியார்களும் அதை விச்வஸித்து அப்பாடத்தையே ஆதரித்து வந்தார் கள். ஒரு ஸமயம் ரஹஸ்யத்ரயஸாரக்ரந்தத்தைப் பரிசீலித்துக்கொண்டு போகையில் அதில் தத்வத்ரய சிந்தநாதிகாரத்தில் இந்த ச்லோகம் உதா ஹரிக்கப்பட்டிருக்குமிடத்து "த்ரிபிரபுஃ" என்கிற சுத்தபாடம் காட்டப் பட்டிருப்பது கண்டு பரமாநந்த ஸந்தோஹம் விளைந்ததடியேனுக்கு. இவ் விடத்தில் அபுஃ என்கிற ரூபமே இருக்கத்தக்கது. முதல் பாதத்தின் முடிவில் (பபௌ) என்கிற ஏகவசநரூபமுள்ளது. அது (மூர்த்திஃ) என்கிற ஏகவசநாந்த கர்த்ருபதத்திற்குச் சேரும். இரண்டாவது பாதத்தில் (திஸ்ரஃ மூர்த்தயஃ) என்கிற பஹுவசநாந்த கர்த்ருபதத்திற்குச் சேர (அபுஃ) என்கிற திஙந்தமே உரியது. அபாத், அபாதாம், அபுஃ. பிரகா சித்தன என்றபடி.

[18. பரோ வா வ்யூஹோ வா.] இதில் இரண்டாவது பாதத்தின் முதலில் 'பவாந்' என்பது தவறு. பவந் என்பதே உரியது.

[21. பாணிபாத வதநேக்ஷண சப்தைஃ] இதில் நான்காவது பாதம் "ஆஞ்ஜநம் கரிகிரேரஸி ச்ருங்கம்" என்றும் "ஆஞ்ஜநஃ கரிகிரேரஸி ச்ருங்கஃ" என்றும் ஓதப்பட்டு வருகிறது. ச்ருங்க சப்தம் உபய லிங்க மாகையாலே இரண்டு பாடமுமொக்கும். ச்ருங்கம் என்று நபும்ஸகலிங்க மாக வோதும்பாடத்தில் ஆஞ்ஜநஃ என்பது மட்டும் பும்லிங்கமாகவே யிருக்கவேணுமென்பது அடியேனுடைய வியாக்கியானத்தில் உபபத்தி யுடன் காணத்தக்கது.

[34. ச்ரவஸச் சத்ருசச்ச.] இதில் இரண்டாவது பாதம் "க்ரஹணே நைவ ஹி ஜீவவத் வ்யவஸ்தா" என்று முன்னோர்களால் ஓதப்பட்டு வந்தது. அதிலும் அநுபபத்தி இல்லை. இங்கு தே என்கிற சொல் இருக்க வேண்டியது ஆவச்யகமாதலால் "க்ரஹணே தே நஹி"

என்கிற பாடம் வந்துகொண்டிருக்கிறது. ச்லோகத்தின் முடிவிலுள்ள (தே) என்பதை அநுஷங்கித்துக் கொள்வதும் குறையற்றதே.

[37. அருணுதரபல்லவே.] இதில் மூன்ருவது பாதம் "அதிவித்ருமம் அஸ்தநிஸ்துலாளீ" என்று பெரும்பாலும் ஓதப்பட்டுவருகிறது. (நிஸ்துல) என்கிற பாடம் தவறு. (நிஸ்தல) என்பது சுத்தபாடம். முத்து என்று பொருள். ஸம்ஸ்கிருத நிகண்டுக்களில் முக்தா சப்த பர்யாயமாக நிஸ்தல சப்தம் உள்ளதாகத் தெரியவில்லை. "வர்த்துலம் நிஸ்தலம் வ்ருத்தம்" என்று அமரஸிம்ஹனும், "நிஸ்தலம் வர்த்துலே சலே" என்று விச்வனும் மற்றும் பல கோசகாரர்களும் இப்படியே சொல்லி வைத்தார்கள். குமாரஸம்பவத்தில் (1—42) "கண்டஸ்ய தஸ்யாః ஸ்தநபந்துரஸ்ய முக்தாகலாபஸ்ய ச நிஸ்தலஸ்ய" என்று வர்த்துல பர்யாயமாகவே ப்ரயோகம் காணுகின்ரும். ஆனுல் தமிழில் நித்தில மென்ருெரு சொல் முத்துக்கு வாசகமாக ப்ரஸித்தமாயுள்ளது. * நின்றவூர் நித்திலத்தை * என்றும், * நின்றவூர் நின்ற நித்திலத் தொத்தினை * என்றும் * நித்திலங்கள் பௌவத் திரையுலவு * என்றும் திவ்யப்ரபந்த ப்ரயோகங்களுள்ளன. சீவக சிந்தாமணி, மணிமேகலை முதலிய தமிழ்க் காவியங்களிலும் இச்சொல் மலிந்துள்ளது. பெரிய திருமொழி யரும்பதவுரைகார ரொருவர் "நிஸ்தலம் என்னும் வடசொல் நித்திலமென்று திரிந்து கிடக்கிறது; முத்து என்றபடி. * நிஸ்தலம் வர்த்துலே முக்தாபலே ச சபலேபிச * இதி நிகண்டுః" என்றெழுதியுள்ளார்.

[54. முஷ்ணந் க்ருஷ்ணః ப்ரியநிஜ.] இதில் மூன்ருவது பாதத்தில் "பந்தக்ஷபண கரணீம்" என்றவிடத்து கரிணீம் என்று பலர் ஓதுவது தவறு. (கரிணீம்) என்கிற ஸ்த்ரீலிங்க ரூபத்திற்குப் பும்லிங்கரூபம் எப்படியென்று கேட்டால் (கரீ) என்று சொல்லவேணும். யானை என்கிற பொருளில்தான் அங்ஙனே சொல் வடிவமுண்டு. பந்தக்ஷபணம் கரோதீதி பந்தக்ஷபணகரீ என்று பும்லிங்கத்தில் வாராது. பந்தக்ஷபண காரீ என்று வரும். ஆகவே இங்கு (கரிணீம்) என்பது அஸங்கதம்: கரணீம் என்பதே சுத்தம்.

[56. ரம்பாஸ்தம்பா: கரிவர கரா:] இதில் முடிவில் "யௌவநாரம்ப ஜ்ரும்பாத்" என்று பலர் ஓதி வருவது மிகத்தவறு. ஜ்ரும்பா: என்பதே பாடம்; 'ஜ்ரும்பாத்' என்பது மொக்கும்.

[59. பக்தாநாம் யத்வபுஷி தஹரம்.] இதில் நான்காம் பாதத்தில் "கிமிதி ஸௌகதம்" "கிமபிஸௌகதம்" என்கிற பாடங்கள் மிகத்தவறு. 'கிம் அதிஸௌகதம்' என்பதேபாடம்.

[80. த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம.] இதில் இரண்டாவது பாதத்தில் "அஹம் கில சஸ்கல ப்ராக்" என்பதே பாடம். (சஸ்கல) என்பது ஸ்கல தாதுவில் பூதே லிடி உத்தம புருஷைகவசந ரூபம். ஸம்ஸ்க்ருத வ்யாக்

க்யாதா இங்கு 'சாஸ்கலம்' என்று பாடங்கொண்டது உள்ள பாடமுணராமையினாலாயது. 'ச அஸ்கலம்' என்ன வேண்டிய ப்ரஸக்தியில்லை. ஆழ்வானுக்கு லிட்ப்ரயோகத்தில் மிகவும் குதூஹலம் காணாநின்றோம்.

[89. **வரத யதிஹ வஸ்து**] இதில் இரண்டாவது பாதத்தில் "தவ சரணலாபாவிரோதஃ" என்கிறபாடம் தவறு; வ்ருத்தபங்கமாகும். '**லபாவிரோத:**' என்பதே பாடம். **லபா** என்பதற்கு லாபமென்பதே பொருள்.

[98. **அசேஷ தேசாகில.**] இதில் மூன்றாவது பாதத்தில் "**தவாச்ரந்**" என்கிற பாடம் புதியது. "**தத் ஆச்ரந்**" என்பதே பாடம்.

[102. **ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி.**] இப்பாடமே எங்கும் வழங்குவது. தத்வதீபத்திலும் தீபப்ரகாசத்திலும் வாதிகேஸரி ஜீயர் ஆதரித்த பாடம் "ராமாநுஜார்ய சரணோஸ்மி" என்பது. இப்பாடத்தில் சரண சப்தத்தில் முதலெழுத்து சவர்க்க ப்ரதமம். "நான் ராமாநுஜார்யருடைய குலத்தையுடையேனாகாநின்றேன்" என்று தீபப்ரகாசத்திலே விவரணமுள்ளது. மேலே குலசப்தமும் வம்ச சப்தமுமிருப்பதால் அவற்றோடு இது இணங்கும். ... ... ... .... *

இனி ஸ்ரீஸ்தவத்தில் பாடபரிஷ்கார ப்ரஸக்தியில்லை. பாடபேதமொன்றும் அதில் காண்கின்றிலோம். (ச்லோ. 5ல்) **துஷ்யேத்** என்பதை **தூஷ்யேத்**' என்று சொல்லுவாருளரெனினும் இத்தகைய பிழைகளைத் திருத்தத் தொடங்கினால் பெரிய புத்தகமாகும். அநேகமாக, ஸ்ரீமத் பரமஹம்ஸ தேரழுந்தூராண்டவன், ஸ்ரீ உவே. கவிபூஷண, (திருவல்லிக்கேணி) அத்தங்கிஸ்வாமி முதலானோர் பதிப்பித்த மூல புத்தகங்களிலும், ப்ராஜ்ஞர்களின் அநுஸந்தானங்களிலும் கண்ணிலும் காதிலும் பட்ட அசுத்த பாடங்களைப்பற்றியே இப்பரிஷ்காரமும் பட்டர் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரமும் வெளியிடப்பட்டன. .... .... *

ஆழ்வான் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்**

**அண்ணங்கராசாரியர் எழுதிய**

# ஆழ்வான் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம்

**முற்றிற்று.**

ஶ்ரீ

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

# ஸ்தோத்ரரத்ந பாடபரிஷ்காரம்.

ஆளவந்தாரருளிச்செய்த ஸ்தோத்ரரத்நம் மற்ற ஸ்தவங்களிற் காட்டிலும் மிக வதிகமான பிரசாரமுள்ளதாகையாலே இதில் பாடப் பிறழ்வுகள் அதிகமாக நேர்ந்திருப்பதுண்டு. அவற்றையெல்லாம் திருத்தப்புகுந்தால் விரிவு பெரிதாம். இளமையில் திருநாராயணபுரம் விடை கொண்டிருந்தேன். அங்கு நித்தியப்படி திருவாராதனத்தில் இருவர் ஸங்கீதத்தோடு இந்த ஸ்தோத்ரத்தைக் கர்ணாம்ருதமாக ஸேவிக்கையில் பலபாடப் பிறழ்வுகள் செவியில்பட்டன. (9:) * கிஞ்சைஷ சக்த்யதிசயேந* என்கிற ச்லோகத்தில் 'ஸ்தோதா அபிது ஸ்துதி' என்பதை 'ஸ்தோதா பிது:' என்று இசை நீட்டினர். (16) * உல்லங்கிதத்ரிவித * ச்லோகத்தில் * தவ பரிப்ரடிம * என்பதை 'பரீப்ருடிம' என்று நீட்டினர். இப்படி ஆங்காங்கு பல பல பாடப்பிறழ்வுகள் காதில் விழுகின்றன. அவற்றை யெல்லாம் திருத்துவது முடியாத காரியம். விவேகிகளுக்கு உபயோகமாகக்கூடிய சில திருத்தங்களையும் பாடபேதங்களையும் காட்டுகிறேன்.

[ச்லோ. 10. நாவேக்ஷஸேயதி.] 'ஸ்வாமிந் விசித்ரம்' என்பது தவறு. ந சித்ரம் (13. வேதாபஹார) 'மஹீஷ்டபல' என்பது தவறு; மஹிஷ்டபல. (16 உல்லங்கித.) 'நிகூஹ்யமாநம்' என்பது மிகத் தவறு. நிகூஹ்யமாநம். (27. தவாம்ருதஸ்யந்திநி) 'ஸ்திதோ ரவிந்தே' என்பது தான் ரஸவத்தரமான பாடம். மதாந்தரஸ்தபண்டிதர் 'ஸ்திதோரவிந்தே' என்று திருத்துவது விரஸம். (40. நிவாஸசய்யாஸந.) 'இதீரிதே' என்பது தான் சுத்த பாடம். இதீர்யதே, என்பது அநந்விதம். (42 த்வதீயபுக்த.) ந்யவேதி தத் நிவேதிதம், என்பன பாடபேதங்கள். (43. ஹதாகிலக்லேச.) ஸதாநுகூல்ய—த்வதாநுகூல்ய—என்பன பாடபேதங்கள். (44 அபூர்வநாநாரஸ.) 'ப்ரபுத்தயா' என்பது தவறு; ப்ரபத்தயா. (46. பவந்தமேவ.) நிரந்தரப்ரசாந்த. அல்ல, (நிரந்தரம்) வ்யஸ்தபதம். (47. விகசுசிமவிநீதம்.) நிர்தயம், நிர்ப்பயம் என்பன பாடபேதங்கள். (52. வபுராதிஷு.) 'ததஹம்' என்பது தவறு; ததயம். (54. அவபோதிதவாந்.) க்ருபயையவமநந்ய, க்ருபயைததநந்ய என்பன பாடபேதங்கள். (63. ரகுவர யதபூஸ் த்வம.) 'யஸ்யசைத்யஸ்ய' தவறு. 'யச்ச சைத்யஸ்ய' என்பதே பொருந்தும்.

சதுச்ச்லோகியில் (ச்லோ. 4 சாந்தாநந்த.) இதில் 'ததோபி யத்ப்ரியதரம்'' என்று பெரும்பாலும் காதில் விழும் பாடம் மிகத்தவறு 'தத்ப்ரியதரம்' என்பதே ஸாது. ... ... ... *

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.